**தேசிய கடல் மீன்வள மசோதா – 2019** ♦ நூலாசிரியர்: திருத்தமிழ்த்தேவனார் எம்.ஏ., எம்.எல்., வழக்குரைஞர், தெற்கு எழுத்தாளர் இயக்கம் ♦ முகவரி: கேசரி தெரு, நாகர்கோவில் – 629 601, பேச: 8300 2071 93. ♦ பதிப்பகம்: நெய்தல்வெளி, 153சி, ஈத்தாமொழி சாலை, நாகர்கோவில் – 629 002, பேச: 9367510043. ♦ முதற்பதிப்பு: 21 நவம்பர் 2019. ♦ வெளியீடு: தெற்காசிய மீனவர் தோழமை, முட்டம் ♦ தட்டச்சு: திருத்தமிழ்த்தேவனார். ♦ நூலாக்கம்: கடிகை ஆன்றனி. ♦ பக்கம்: 56 ♦ விலை: 30/-

**நன்றிக்குரியவர்கள்:**

☯ *ஆர். பிரேம்குமார், தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றம், நாகர்கோவில்.*

☯ *குமரி எழிலன், தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர்கள் கலைஞர்கள் சங்கம், நாகர்கோவில்.*

☯ *யசுதின் திவாகர், நெய்தல்வெளி, நாகர்கோவில்.*

☯ *கடிகை ஆன்றனி.*

**பொருளடக்கம்:**

# தேசிய கடல் மீன்வள (ஒழுங்குமுறை மற்றும் மேலாண்மை) மசோதா - 2019

இந்திய பிரத்தியேகப் பொருளாதார மண்டலத்தில் மீன் பிடிப்பதை ஒழுங்குபடுத்தவும், மேலாண்மை செய்யவும் மற்றும் ஆழ்கடல்களில் மீன்பிடிக்கும் இந்திய மீன்பிடி படகுகளை நீண்டகால நிலைத்தப் பொறுப்புக்கு உள்ளாக்கவும் மற்றும் கடலிலுள்ள மீன்வளங்களைச் சரியான முறையில் பயன்படுத்தவும், கண்காணிப்பை உறுதிபடுத்தவும், கட்டுப்பாடு மற்றும் கவனம் செலுத்தவும்; கடலில் மீனவர்களுக்கு ஆதரவு, பாதுகாப்பு மற்றும் இடர்பாதுகாப்பு அளிக்கவும்; பாரம்பரிய மற்றும் சிறுதொழில் செய்கின்ற மீனவர்களின் வாழ்வாதாரங்களைப் பாதுகாக்கவும், கடல் சூழல் மண்டலங்களிலுள்ள உயிரினங்களைப் பாதுகாக்கவும், மீன்வளப் பாதுகாப்பை ஊக்குவிக்கவும், நிர்வாக நடவடிக்கைகள் மற்றும் இத்தோடு தொடர்புடைய மற்றும் நிகழ்பவைகள் குறித்து இந்தியக் குடியரசின் 70–வது ஆண்டில், இந்தியப் பாராளுமன்றத்தில் பின்வருமாறு அது இயற்றப்படுவதாவது:

## அத்தியாயம் – 1

### வரையறை

**1. குறுந்தலைப்பு மற்றும் தொடக்கம்:**

I. இந்த மசோதா, தேசிய கடல் மீன்வள (ஒழுங்குமுறை மற்றும் மேலாண்மை) மசோதா – 2019 என அழைக்கப்படலாம்.

II. அறிவிப்பு செய்தல், அரசிதழில் வெளியிடுதல் மற்றும் நியமித்தல் மூலம் மத்திய அரசாங்கம் அறிவிக்கும் நாளில், இது நடைமுறைக்கு வரலாம்.

**2. வரையறைகள்:**

*இந்த மசோதாவில், சூழல் மாறுபடாத நிலையில்,*

a) *"அங்கீகரிக்கப்பட்ட அதிகாரி" என்பது ஏதாவதொரு அதிகாரி அல்லது கடலோர பாதுகாப்புச் சட்டம் 1978–இன்படி இந்திய கடலோர காவல் படையின் துணை அதிகாரி அல்லது மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட மத்திய அல்லது மாநில அரசாங்கத்திலுள்ள ஏதாவதொரு அதிகாரி.*

b) *"அங்கீகரிக்கப்பட்ட நிறுவனம்" என்பது மத்திய அல்லது மாநில / ஒன்றியப் பிரதேச அரசால் அங்கீகரிக்கப்பட்ட ஏதாவதொரு அமைப்பு, துறை, சங்கம் அல்லது நிறுவனமானது ஒழுங்குபடுத்துதல், நிர்வகித்தல் மற்றும் ஒருங்கிணைப்பு செய்தல் ஆகியவற்றை நடைமுறைக்கு கொண்டுவருவதுடன், இந்த மசோதாவில் குறிப்பிடப்பட்டுள்ள விதிகளின்படி மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட அதிகாரியுடன் இணைந்து செயல்படுதல்.*

c) *"பொறுப்பான மீன்பிடிப்பு நடத்தை விதி" என்பது வழிகாட்டும் கொள்கைகளை நிறுவுதல் மற்றும் பாதுகாப்பிற்காக தரம் வாய்ந்தவைகளை பயன்படுத்துதல், இந்திய கடல் மண்டலம் மற்றும் மீன்வள மேம்பாட்டை மேலாண்மை செய்தல் மற்றும் தேவையான அளவு கட்டமைப்புகளை உருவாக்கி, நீர்வாழ் வளங்களை நிலையான சுரண்டலுக்கு உள்ளாக்காமல் சுற்றுச்சூழலுடன் இணக்கமான நீடுவாழ் பயன்பாட்டுக்கு உட்படுத்தல் ஆகும்.*

d) *"நிறுவனம்" என்பது நிறுவனங்கள் சட்டம் 2013–இன்கீழ் வரையறை செய்யப்பட்ட நிறுவனத்தையே குறிக்கும்.*

e) *"பாதுகாப்பு மற்றும் மேலாண்மை அளவுகோல்கள்" என்பது ஆழ்கடல் சம்பந்தமாக ஏற்கப்படுகின்ற மற்றும் பயன்படுத்துகின்ற சீரான மற்றும் பொருத்தமான விதிகள் அடங்கிய சர்வதேச சட்டம் மற்றும் இந்திய கடல் மண்டலத்தில் வாழும் குறிப்பிட்ட வகை வளங்களை*

அக்கறையோடு அளவீடு செய்தல் மற்றும் பாதுகாத்தல் ஆகியவற்றைக் குறிக்கும்.

f) "மீன்வள நிர்வாகம் அணுகும் சூழல் மண்டலம்" என்பது நிலையான வளர்ச்சியைச் செயல்படுத்தும் நடைமுறை வழி மற்றும் சுற்றுச்சூழல் நல்வாழ்வு, மனித நல்வாழ்வு மற்றும் நிர்வாகம் ஆகியவற்றை உள்ளடக்கிய அதிகபட்ச நீடித்தத் தன்மையுள்ள மீன்வளச் சூழல் மண்டலம்.

g) "அருகிவரும், அச்சுறுத்தப்படும் மற்றும் பாதுகாக்கப்படும் உயிரினங்கள்" என்பதில், அருகிவருகிற அல்லது அச்சுறுத்தப்படுகிற கடல் விலங்குகள் மற்றும் ஏனையவைகளில் கடல் ஆமைகள், கடல் பாலூட்டிகள், சிலவகை சுறாக்கள், திருக்கை மீன்கள் மற்றும் அரசால் வெளியிடப்படும் குறிப்பிட்ட வகையான மீன்கள் ஆகியவற்றிற்கு போதிய பாதுகாப்பாக மாநில அளவிலோ அல்லது தேசிய அளவிலோ அல்லது பன்னாட்டு அளவிலோ அல்லது சர்வதேச அளவில் பொருத்தமான சட்டங்களின்படி அமையும்.

h) "பிரத்தியேகப் பொருளாதார மண்டலம்" என்பது கடல் எல்லை, கண்டத் திட்டு, இந்திய பிரத்தியேகப் பொருளாதார மண்டலம் மற்றும் இதர இந்திய கடல்சார் மண்டலங்கள் சட்டம் – 1976, பிரிவு 7–இன்கீழ் வரையறை செய்யப்படுகிற பிரத்தியேகப் பொருளாதார மண்டலத்தைக் குறிக்கும்.

i) "மீன்" என்பது துடுப்புடலிகள், மெல்லுடலிகள், ஓட்டுடலிகள் மற்றும் தாவரங்கள் தவிர, இதர வகையான கடல் பாலூட்டிகள், ஊர்வன வகைகள் மற்றும் பறவைகள் ஆகியவற்றைக் குறிக்கும்.

j) "மீன்வளம்" என்பது "மீன்பிடித்தல்" மற்றும் "மீன்பிடி சார்ந்த செயல்பாடுகள்" ஆகும்.

k) "மீன்பிடித்தல்" மற்றும் "மீன்பிடி சார்ந்த செயல்பாடுகள்" கீழ்கண்டவற்றை உள்ளடக்கியதே ஆகும்.

   I. பிடித்தல் அல்லது எடுத்தல் அல்லது எவ்வகையிலும் மீனை சேர்த்தல்.

II. அதனைத் தேடு அல்லது கண்காணி அல்லது பின்பற்று அல்லது மீனைத் துரத்து.

III. இவைகளுக்கு மத்தியில் பிற செயல்பாட்டில் ஈடுபட்டிருந்தால், அல்லது இதற்கு முன்பாக மீனை துறைமுகத்தில் தரை இறக்கவில்லை என்றால், இறக்குதல், பொட்டலம் கட்டுதல், பதப்படுத்துதல், ஏற்றுதல் அல்லது ஏற்றுமதி செய்தல் ஆகியவற்றை உள்ளடக்கியதாக அமையும்.

IV. கடலில் எடுக்கும் எந்தவொரு நடவடிக்கைக்கும் நேரடியாக ஆதரவளித்தல் அல்லது கூட்டுசேர்தல் அல்லது இந்த வரையறையில் விவரிக்கப்பட்டுள்ள எந்தவொரு செயலையும் தயாரித்தல் அல்லது செயலாக்கம் செய்தல் அல்லது எந்தவொரு மீனையும் பாதுகாத்தல்.

V. கடல்வாழ் வளங்களை பாதுகாத்தல் மற்றும் மேலாண்மை செய்தல்.

l) “மீன்வள மேலாண்மைத் திட்டம்” என்பது மீன் வளங்களை நீண்டகாலம் பேணுவது தொடர்பாக மீன்பிடிப்பை மேம்படுத்துதல் மற்றும் நிலைத்த பயன்பாட்டிற்காக மீன் இருப்புகளை உருவாக்குதல், மீன் வளங்களை வளர்ச்சிக்கு உள்ளாக்குதல், மேலாண்மை செய்தல், கண்காணித்தல், கட்டுப்படுத்துதல், மேற்பார்வையிடுதல் மற்றும் ஒழுங்கினைப் பேணுதல் ஆகியவற்றிற்கு உட்பட்டு, இந்திய கடல்சார் மண்டலச் சட்டம் மூலம் ஒழுங்கை நிலைநாட்டவும் மற்றும் மீன்பிடித்தல் தொடர்பான செயல்பாடுகள் குறித்து மத்திய அரசாங்கம் எந்தவொரு உத்தரவையும் வெளியிடலாம்.

m) “மீன்பிடிக்கலன்” என்பது வணிகக் கப்பல் சட்டம் 1958– இன்படி வரையறை செய்யப்படுள்ளது.

n) “வெளிநாட்டு மீன்பிடிக் கலன்” என்பது இந்திய மீன்பிடிக் கப்பல்களைத் தவிர்த்து, இதர மீன்பிடிக் கப்பல்களைக் குறிக்கும்.

o) “ஆழ்கடல்” என்பது இந்தியாவின் இறையாண்மைக்குரிய பிரத்தியேகப் பொருளாதார மண்டல வெளிப்புற எல்கைக்கு அப்பால் கடல் இருப்பதோடு அல்லாமல், வேறு எந்தவொரு நாட்டினுடைய பிரத்தியேகப் பொருளாதார மண்டலத்தில் வருவதாகவும் இருத்தல் கூடாது.

p) “சட்டத்திற்குப் புறம்பான, தகவல் தெரிவிக்காத மற்றும் கட்டுப்பாடற்ற மீன்பிடிப்பு” என்பது கீழ்காணும் செயல்பாடுகளை உள்ளடக்கியது:

(A) சட்டவிரோத மீன்பிடித்தல் என்பது ஏதாவதொரு மீன்பிடிச் செயல்:

I. இந்த சட்டத்தின்கீழ் வழங்கப்பட்ட உரிமம் இல்லாமல் பிரத்தியேகப் பொருளாதார மண்டலத்தில் இந்திய கலன்கள் இயங்குதல்.

II. இந்திய கடல் மண்டலங்களில் வெளிநாட்டுக் கலன்கள் இயங்குதல்.

III. இந்தியா உறுப்பினராகவுள்ள வட்டார மீன்வள மேலாண்மை நிறுவனம் வகுத்துள்ள பாதுகாப்பு மற்றும் மேலாண்மை விதிகளுக்கு முரணாகவும், பன்னாட்டு சட்டத்தின் விதிகளுக்கு முரணாகவும் இந்தியக் கலன்கள் இயங்குதல்.

(B) தகவல் தெரியப்படுத்தாத மீன்பிடித்தல் என்பது ஏதாவதொரு மீன்பிடிச் செயல்:

I. விதிகள் மற்றும் ஒழுங்குமுறை ஆகியவற்றில் குறிப்பிட்டுள்ளபடி புகார் அளிக்காத இந்திய அல்லது வெளிநாட்டுக் கலன்(கள்) அல்லது இந்த சட்டத்தின்கீழ் அதிகாரியிடம் தவறாக மற்றும் முரணாக தகவல் தெரிவித்துச் செயல்படுதல்.

II. இந்தியா உறுப்பு நாடாகக் கையெழுத்து செய்து, மண்டல மேலாண்மை அமைப்புகளால் தடை செய்யப்பட்ட தகுதியான பகுதிகளில் இந்தியக் கலன்கள் செயல்படுதல்.

(C) ஒழுங்குபடுத்தாத மீன்பிடித்தல் என்பது ஏதாவதொரு மீன்பிடிச் செயல்:

I. இந்திய கடல்சார் மண்டலத்திற்கு அப்பாற்பட்டப் பகுதிகளில், இந்த சட்டத்தில் கூறப்பட்டுள்ள பாதுகாப்பு மற்றும் மேலாண்மை எல்கைகள் தொடர்பான விதிகளுக்கு முரணாக இந்திய அல்லது வெளிநாட்டு மீன்பிடிக்கலன் செயல்படுதல், அல்லது

II. மீன் குடியிருப்புக்குள் செல்வதற்குப் பொருத்தமான பாதுகாப்பு இல்லாத நிலையில் அல்லது நிர்வாக நடவடிக்கைகள் மற்றும் அத்தகைய மீன்பிடிச் செயல்பாடுகள் ஆகியவை இந்த சட்ட விதிகளுக்கு முரணாக இருக்கிற நிலையில், இந்திய கடல் மண்டலத்திற்குள் இந்தியக் கலன்கள் மற்றும் இந்திய கடல்சார் மண்டலத்திற்கு அப்பாற்பட்ட பகுதிகளில் இந்திய மற்றும் வெளிநாட்டுக் கலன்கள் பாதகம் விளைவிக்கின்ற செயல்பாடுகள்.

q) “இந்திய மீன்பிடிக்கலன்” என்பது வணிகக் கப்பல் சட்டம் 1958–இன்கீழ் பதிவு செய்யப்பட்ட மீன்பிடிக்கலன் மற்றும் அதன் உரிமையாளராக கீழ்க்காணும் நபர் இருக்க வேண்டியதுமாகும்.

I. இந்திய அரசு அல்லது ஏதாவதொரு மாநில அரசு, அல்லது மத்திய அரசின் சட்டப்படி அல்லது மாநில அரசின் சட்டப்படி உருவாக்கப்பட்ட ஓர் நிறுவனம்; அல்லது

II. பின்வரும் வரையறையில் ஏதேனும் ஒன்று, ஒவ்வொரு நபருக்கும் பொருந்துபவையாக இருக்கும். அவை:

a. ஓர் இந்தியக் குடிமகன்; அல்லது

b. முழுப்பங்கு மூலதனத்தையும் இந்தியக் குடிமகன்(கள்) கைவசம் வைத்திருக்கும் ஒரு நிறுவனம்; அல்லது

c. முறையாக பதிவு செய்யப்பட்ட நிறுவனத்திலுள்ள

ஒவ்வொரு பங்குதாரரும் இந்தியக் குடிமகன்(கள்) ஆக இருத்தல் வேண்டும்; அல்லது

d. சங்கப் பதிவு சட்டம் 1890–இன்படி, பதிவு செய்யப்பட்டுள்ள மீனவ அமைப்பு / கூட்டமைப்பு அல்லது கடலோர மாநிலங்களில் / ஒன்றியப் பிரதேசங்களில் இயற்றப்பட்டுள்ள வேறு ஏதேனும் சட்டம் மற்றும் அதிலுள்ள ஒவ்வொரு உறுப்பினரும் இந்தியக் குடிமகனாக இருத்தல் வேண்டும்; அல்லது

e. அனைத்து உறுப்பினர்களும் இந்தியக் குடிமகன்களாக மட்டுமே இருக்கக்கூடிய வகையில் பதிவு செய்யப்பட்ட கூட்டுறவுச் சங்கம் அல்லது பிற கூட்டுறவுச் சங்கங்களில் உறுப்பினராக இருந்தால், பிற கூட்டுறவுச் சங்கத்திலுள்ள ஒவ்வொரு தனிநபர் உறுப்பினரும் இந்திய குடிமகன்களாக இருத்தல் வேண்டும்; அல்லது

f. மேலே குறிப்பிட்டுள்ளவை தவிர, மத்திய அரசானது அலுவலக அரசிதழில் அறிக்கை செய்து, இந்திய மீன்பிடிக் கலன் என்று வரையறுத்துகிற ஏதேனும் படகு அல்லது கைவினைக் கலன்.

r) “இந்திய கடலாண்மை மண்டலங்கள்” என்பது கடல் எல்லைகள், அடுத்துள்ள மண்டலம், கண்டத்திட்டு, பிரத்தியேகப் பொருளாதார மண்டலம் மற்றும் இதர கடல்சார் மண்டலங்கள் சட்டம் 1976–இன்படி வரையறை செய்யப்பட்டுள்ள கடல் எல்லைகள், அடுத்துள்ள மண்டலம், கண்டத்திட்டு, பிரத்தியேகப் பொருளாதார மண்டலம் மற்றும் இதர கடல்சார் மண்டலங்கள் ஆகும்.

s) “தலைவர்” என்பது கலனோடு தொடர்புடைய கட்டளையிடும் நபர் அல்லது கலனின் பொறுப்பாளர் அல்லது கலனின் செயல்பாட்டிற்கான பொறுப்பை உடையவர்.

t) “தடை செய்யப்பட்ட மீன்பிடி மண்டலம்” என்பது

அரசால், அரசிதழில் அறிவிப்பு செய்து, குறிப்பிட்ட காலத்திற்கு எந்த வகையிலும் மீன்பிடிப்பதற்கு தடை செய்யப்பட்ட குறிப்பிட்ட பகுதி.

u) “அறிவிப்பு” என்பது அரசிதழில் அதிகாரபூர்வமாக வெளியிடப்பட்ட அறிவிப்பு மற்றும் தெரிவிக்கப்பட்ட அறிவிப்பு மற்றும் அதன்படியே கட்டமைக்கப்படும்.

v) “இயக்குபவர்” என்பது ஏதாவது நபர் அல்லது செயலை கட்டுப்படுத்துபவர் அல்லது கலனை நிர்வகிப்பவர்; அல்லது கலனிலுள்ள செயல்களுக்கு பொறுப்பாகக் கருதப்படுபவர்.

w) “உரிமையாளர்” என்பது கலனோடு தொடர்புடைய கலனின் உரிமையாளர் அல்லது அதுபோல் ஏதாவதொரு நபர், இணைக்கப்பட்ட அல்லது இணைக்கப்படாத ஏதாவதொரு அமைப்பு அல்லது கூட்டமைப்புகளில் உறுப்பினர்களான கலனின் சொந்தக்காரர் அல்லது கலனின் பங்குதாரர் ஆகியோரையும் உள்ளடக்கியதே.

x) “உரிமம்” என்பது கலனோடு தொடர்புடைய, அதாவது, இந்த சட்டத்தின்கீழ் மீன் பிடிப்பதற்கு வழங்கப்பட்ட உரிமம் மற்றும் மீன்பிடி தொடர்பாக குறிப்பிடப்பட்ட செயல்பாடுகளைக் குறிக்கும்.

y) ”பரிந்துரைத்தல்” என்பது இந்த சட்டத்தின்கீழ் பரிந்துரைக்கப்பட்ட விதிகள்.

z) “பதப்படுத்துதல்” என்பது மீன்பிடித்தலோடு தொடர்புடைய தூய்மைப்படுத்துதல், வெட்டுதல் மற்றும் எலும்புகள், சிறகுகள், செதில்கள், உள்ளூறுப்புகள் (குடல் மற்றும் பிற மென்மையான பாகங்கள்) ஆகியவைகளை நீக்குதல், தலை அகற்றுதல், குருதி வடிதல், முள்ளுகளை அகற்றுதல், தோலுரித்தல், பனிக்கட்டி இடுதல், உறைய வைத்தல், பதப்படுத்துதல், உப்பு இடுதல், புகையூட்டுதல், உறைய வைத்தல், ஊறுகாய்ப் போடுதல், உலர வைத்தல் மற்றும் இவைகளில் ஏதும் இல்லையெனில், தயார்படுத்துதல் அல்லது வேறு வகையில் மீனைப் பதப்படுத்துதல் ஆகியவற்றைக் குறிக்கும்.

aa) *“குறிப்பிடப்பட்டத் துறைமுகங்கள்” என்பது இந்த சட்டத்தின் நோக்கத்திற்காக மத்திய அரசாங்கம் அலுவலக அரசிதழில் அறிக்கை செய்கிற துறைமுகங்களைக் குறிக்கும்.*

bb) *“இந்தியாவின் நீர் எல்லைகள்” என்பது இந்திய கடல் எல்லைகள், கண்டத்திட்டு, பிரத்தியேகப் பொருளாதார மண்டலம் மற்றும் பிற கடல்சார் மண்டலங்களுக்கான இந்தியச் சட்டம் 1976, பிரிவு 3–இல் கூறப்படும் நிபந்தனைகளுக்கு ஏற்ப வரையறை செய்யப்பட்டுள்ள நீர் எல்லைகள் ஆகும்.*

cc) *“கலன்” என்பது ஏதேனும் கப்பல் அல்லது கலன், பயணக்கலன், பந்தயக் கலன்கள், காவல் கலன்கள், போக்குவரத்து அல்லது சரக்குக் கலன்கள், அல்லது மீன்வள ஆராய்ச்சிக் கலன்கள் அல்லது வேறுவகையில் மீன்பிடிக்கும் திறனுடைய கலன்கள், இருப்பு வைத்தல் அல்லது சேமித்து வைத்தல் அல்லது பதப்படுத்துதல் அல்லது போக்குவரத்தாகும் மீன், எரிபொருள் அல்லது அதிலிருந்து இதர விநியோகம் அல்லது அதற்கான மீன்பிடிக் கலன் அல்லது தளவாடங்கள் வழங்கும் திறன் அல்லது இதர வகையில் உதவிகரமாக இருக்கும் மீன்பிடிக் கலன்கள் ஆகியவற்றைக் குறிக்கும்.*

## அத்தியாயம் - 2

## ஆழ்கடல் மற்றும் பிரத்தியேகப் பொருளாதார மண்டலங்களில் மீன்வளத்தை ஒழுங்குமுறைப்படுத்துதல்

### 3. உரிமம் இல்லாமல் மீன்பிடிக்கத் தடை:

I. *இந்திய கடல்சார் மண்டலங்களிலும், ஆழ்கடல்களிலும் கட்டுப்பாடுகள் மற்றும் நிபந்தனைகளுக்கு உட்பட்டு மத்திய அரசாங்கம் அல்லது இந்த சட்டத்தின்படி அறிவிக்கப்பட்ட ஏதாவது அதிகாரி வழங்கும் உரிமம் இல்லாமல் எந்தவொரு இந்திய மீன்பிடிக் கலனும் மீன்பிடித்தல் மற்றும் மீன்பிடித்தல் தொடர்பான செயல்களில் ஈடுபடக்கூடாது.*

II. இந்த சட்டத்தின்கீழ் உரிமம் பெற வேண்டுமென்றால் பரிந்துரைக்கப்பட்ட உரிமம் கட்டணத்தை உரிய படிவத்தில் முறைப்படி செலுத்த வேண்டும்.

III. மேலும், மீன்பிடித்தல் மற்றும் மீன்பிடித்தல் தொடர்பான செயல்களில் ஈடுபடுவதற்கு பரிந்துரைக்கப்பட்ட வரிகள் மற்றும் கட்டணங்கள் ஆகியவற்றை உரிய படிவத்தில் முறைப்படி செலுத்த வேண்டும்.

மீன்பிடித்தல் மற்றும் மீன்பிடித்தல் சம்பந்தமான செயல்களில் ஈடுபடும் ஆராய்ச்சி கலன்கள் மற்றும் பரிந்துரைக்கபட்ட இதர கலன்கள் ஆகியவற்றிற்கு கட்டணத்தை செலுத்துவதிலிருந்து மத்திய அரசு விலக்கு அளிக்கலாம்.

அதற்கு மேலும், கட்டண உரிமம், வரிகள் மற்றும் சேவைகள் மூலம் வசூலிக்கப்பட்ட தொகையை ஆராய்ச்சி செய்தல், கண்டறிதல் மற்றும் நிர்வாக செயல்பாடுகள் ஆகியவற்றிற்கும், இந்திய கடல்சார் மண்டலத்தில் நிலைத்த மீன்வளத்தை பாதுகாப்பதற்காகப் பரிந்துரைக்கப்பட்ட மற்றும் தற்செயலான விசயங்களுக்கும் பயன்படுத்தலாம்.

IV. வணிகக் கப்பல் சட்டம் 1958–இன்படி, பதிவு செய்யப்பட்ட மீன்பிடிக் கலன்களுக்கு மட்டுமே உரிமம் வழங்கப்படும்.

V. இச்சட்டத்தின்படி, வெளிநாட்டு மீன்பிடி கலன்களுக்கு இந்திய கடல்சார் மண்டலங்களுக்கு உட்பட்டப் பகுதிகளில் மீன்பிடிப்பதற்கு மற்றும் மீன்பிடித்தல் தொடர்பான செயல்களில் ஈடுபடுவதற்கு உரிமம் வழங்கப்படமாட்டாது.

VI. இந்த சட்டத்தின்படி வழங்கப்பட்ட உரிமத்தை வேறொருவருக்கு மாற்றித் தரவோ, ஒதுக்கீடு செய்யவோ அல்லது மூன்றாம் நபரின் நன்மைக்காக வேண்டி உருவாக்கவோ கூடாது.

VII. கடலில் பயன்படுத்த தகுதியில்லாத கலன்கள், பாதுகாப்பு மற்றும் கட்டுமான அமைப்பு மற்றும் அக்கலனிலுள்ள

பல்லிணை (கியர்) அல்லது தடைசெய்ததாக குறிப்பிடப்பட்டுள்ள மீன்பிடி முறைகளை பயன்படுத்துதல் போன்ற காரணங்களுக்காக வேண்டி மத்திய அரசாங்கம் கலனுக்கு உரிமம் வழங்குவதை நிராகரிக்கவோ அல்லது திரும்பப் பெறவோ செய்யலாம்.

VIII. இந்திய தேசியப் பாதுகாப்புக் கருதியும், இந்திய கடல்சார் மண்டலங்களில் சட்ட ஒழுங்கை நிலைநாட்டவும் அல்லது பிற வகையில் பொதுநலன் கருதியும் மத்திய அரசானது கலனுக்கு உரிமம் வழங்குவதை நிராகரிக்கவோ அல்லது திரும்பப் பெறவோ செய்யலாம்.

IX. உரிமம் பெறுவதற்காக விண்ணப்பிக்கப்படும் ஒவ்வொரு மனுக்களையும் ஏற்பதுமான அல்லது நிராகரிப்பதுமான உத்தரவுகள் எழுத்துபூர்வமாக அமைதல் வேண்டும்.

**4. உரிமத்தை இடைநிறுத்தம் செய்தல் அல்லது இரத்து செய்தல்:**

*(1)* கீழ்க்காணும் வகையில் நம்புவதற்கு ஏதேனும் நியாயமான காரணம் இருந்தால், மத்திய அரசு, இந்த சட்டத்தின்படி வழங்கிய உரிமத்தை நிராகரிக்கவோ அல்லது தற்காலிகமாக நிறுத்தி வைக்கவோ செய்யலாம்.

a) அங்கே, இச்சட்டத்திலுள்ள ஏதாவதொரு விதிமுறை மீறப்பட்டிருந்தால்; அல்லது

b) பரிந்துரைக்கப்பட்ட உரிமம் சார்ந்த விதிமுறைகள் அல்லது ஏதாவதொரு நிபந்தனைகள் அல்லது உரிமத்தில் குறிப்பிடப்பட்ட கட்டுப்பாடுகள் அல்லது இந்த சட்டத்தின்கீழ் உருவாக்கப்பட்ட ஏதாவதொரு விதிகள், அல்லது ஏதாவதொரு மீன்வள மேலாண்மைத் திட்டம் போன்றவற்றிற்கு முரணாக செயல்படுதல்; அல்லது தடைசெய்யப்பட்ட மீன் மண்டலத்தில் மீன்பிடித்தல்; அல்லது

c) தகுதியில்லாத கலன்களை கடலில் பயன்படுத்துதல் அல்லது பாதுகாப்பு விதிகளை மதிக்காதிருத்தல் மற்றும் தொழில் விதிமுறைகள் அல்லது மீன்பிடிக் கலனில் தடை செய்யப்பட்ட பல்லிணைகளை பயன்படுத்துதல்

அல்லது பரிந்துரைக்கப்பட்ட முறைகளை பின்பற்றாமல் இருத்தல்; அல்லது

d)தவறான அல்லது பிழையான தகவலின் அடிப்படையில் உரிமம் அல்லது புதுப்பித்தல் வழங்கப்பட்டு இருந்தால்:

இந்த உரிமத்தை ஏன் இரத்து செய்யவோ அல்லது இடைநீக்கம் செய்யவோ கூடாது என்பதற்கு உட்பிரிவு (1)–இன்படி, உரிமம் வைத்திருப்பவருக்கு நியாயமான வாய்ப்பு வழங்காமல் உரிமத்தை இரத்து செய்யவோ அல்லது இடைநிறுத்தம் செய்யவோ கூடாது.

மேலும் கூறப்படுவது யாதெனில், இந்த உட்பிரிவின் உதவியோடு, எழுத்துபூர்வமாக பதிவு செய்யப்பட்டக் காரணங்களில் மத்திய அரசு திருப்தி அடைந்தால் உரிமத்தை வைத்திருப்பவருக்கு காரணத்தை காண்பிப்பதற்கான வாய்ப்பு வழங்குவது நியாயமானதல்ல.

(2) உரிமத்தை இரத்து செய்தல் அல்லது இடைநிறுத்தம் செய்தல் குறித்த ஒவ்வொரு உத்தரவும் எழுத்துபூர்வமாக இருக்க வேண்டும்.

(3) உட்பிரிவு (1)–இன்படி, ஒருவரின் உரிமம் இரத்து செய்யப்பட்டாலோ அல்லது இடைநீக்கம் செய்யப்பட்டாலோ, இரத்து அல்லது இடைநீக்கம் செய்யப்பட்ட உடனேயே மீன் பிடித்தல் அல்லது மீன்பிடித்தல் தொடர்பான செயல்பாடுகளை நிறுத்திக்கொள்ள வேண்டும் என்பதுடன், அத்தகைய உத்தரவு திரும்பப் பெறப்படும்வரை, மீன்பிடித்தலை அல்லது மீன்பிடித்தல் தொடர்பான செயல்பாடுகளை மீண்டும் தொடங்கக்கூடாது.

(4) மத்திய அரசு, இந்த சட்டத்தின்கீழ் வழங்கிய உரிமத்தை, இந்தியாவின் தேசிய பாதுகாப்பு கருதியோ, சட்டத்தைப் பராமரிப்பதன் பொருட்டோ மற்றும் இந்திய கடலாண்மை மண்டலங்களின் உத்தரவின் பேரிலோ அல்லது இதர பொதுநலன் சார்ந்த விசயங்களின் பொருட்டோ இரத்து செய்யலாம்.

## அத்தியாயம் - 3

## கலன்கள் மற்றும் மீனவர்களின் பாதுகாப்பு மற்றும் உத்தரவாதம்.

**5. கண்காணிப்பு, கட்டுப்பாடு மற்றும் மேற்பார்வை:**

*கண்காணித்தல், கட்டுப்படுத்துதல் மற்றும் பாதுகாப்பிற்காக மேற்பார்வை செய்தல் மற்றும் இடர்காப்பில் மீனவர்கள் மற்றும் மீன்பிடிக் கலன்கள் மற்றும் இந்திய கடலாண்மை மண்டலங்களில் மீன்வள மேலாண்மை செய்வதற்கான நடவடிக்கைகளின் உடன்பாட்டிற்கு ஓர் அமைப்பை மத்திய அரசு அறிவிக்கலாம்.*

**6. காப்பீடு மற்றும் கடல் பாதுகாப்பு:**

*இந்த சட்டத்தின் பிரிவு 3 உட்பிரிவு (1)–இன்படி உரிமம் பெற்ற மீன்பிடிக் கலனில் ஆட்களை பணியமர்த்துதல், காப்பீடு செய்தல், கடல் பாதுகாப்பு மற்றும் கடலில் பயன்படுத்த தகுதியில்லாத கலன்களின் நியமங்கள் ஆகியவை வணிகக் கப்பல் சட்டம் 1958–இல் குறிப்பிட்டுள்ளபடி வரையறை செய்யப்படும்.*

## அத்தியாயம் - 4

## போக்குவரத்து மற்றும் ஆராய்ச்சி

**7. வெளிநாட்டு மீன்பிடிக் கலனின் போக்குவரத்து:**

*இந்திய கடல்சார் மண்டலங்களில் பயணிக்கும் ஒவ்வொரு வெளிநாட்டுக் கலன் அல்லது கொடியுடைய கலன், பரிந்துரைக்கப்பட்ட நடைமுறையைப் பின்பற்ற வேண்டும்.*

**8. அறிவியல் ஆராய்ச்சி மற்றும் பொழுதுபோக்கு மீன்பிடிப்புக்கான விதிமுறைகள்:**

*அறிவியல் ஆராய்ச்சி, கணக்கெடுப்பு அல்லது மீன்வளம் தொடர்பான விசாரணை அல்லது ஏதாவது சோதனை அல்லது பொழுதுபோக்கிற்காக மீன்பிடித்தல் அல்லது*

*பரிந்துரைக்கப்பட்ட விதிமுறைகள் மற்றும் நிபந்தனைகளுக்கு ஏற்பவும், ஏதாவது பிற நோக்கத்திற்காக வேண்டியும் சிறப்பு உரிமத்தை மத்திய அரசு எழுத்துப்பூர்வமாக வழங்கலாம்.*

## அத்தியாயம் - 5

## பல்லுயிர், பேணுகை, மேலாண்மை மற்றும் நிலைத்தத் தன்மை

**9. பல்லுயிர் பாதுகாப்பு:**

*(1) குறிப்பிடத்தக்க சூழியல் மற்றும் உயிரியல் பகுதிகள், பாதிப்பிற்குள்ள கடல் சூழல் மண்டலங்கள், ஆபத்தான மற்றும் அச்சுறுத்தப்பட்ட உயிரினங்களின் பாதுகாப்பை உறுதி செய்தல் மற்றும் கடல் சூழலின் சுற்றுச்சூழல் மற்றும் பல்லுயிர்களை சமநிலையில் பேணுதல் போன்றவற்றிற்காக பாதுகாக்கப்பட்ட கடல் பகுதிகளில் மீன்பிடித்தல் தடை செய்யப்படலாம்.*

*(2) வளங்களின் நிலையான பயன்பாட்டை உறுதி செய்வதற்கும் மற்றும் மீனவர்களின் பாதுகாப்பிற்காகவும், இனப்பெருக்க காலத்தில் இடம் மற்றும் காலம் ஆகியவற்றைப் பரிந்துரைக்கிறபடி செயல்படுத்தலாம்.*

**10. மீன்வள மேலாண்மைத் திட்டம்:**

*1. பொறுப்பான மீன் வளத்திற்கான அடிப்படைக் கொள்கைகளை உள்ளடக்கிய ஐக்கிய நாடுகளின் நடத்தை விதிப்படி ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட மீன் இனங்கள் மற்றும் மீன்பிடித் தொடர்பான செயல்பாடுகள் ஆகியவற்றை மேலாண்மை செய்வதற்கு ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட திட்டங்களை மத்திய அரசு அவ்வப்போது அறிவிப்பதுடன், மீன்பிடித் தொடர்பான நடவடிக்கைகள் மற்றும் மீன்வள மேலாண்மை தொடர்பான சுற்றுச்சூழல் அணுகுமுறை ஆகியவற்றிற்கு இணங்க இந்தியாவின் கடல் மண்டலப் பகுதி(கள்) பரிந்துரைக்கப்படலாம்.*

*இந்திய கடல் எல்லைக்குள் இருக்கிற ஏதாவதொரு பகுதியில் மீன்வள மேலாண்மைத் திட்டம் தயாரிக்கப்பட்டால், அத்தகையத் திட்டத்தை அந்த நீர்நிலைகளுக்கு உட்பட்ட மாநில அரசுடன் அல்லது ஒன்றிய அரசுடன் மத்திய அரசு கலந்து ஆலோசிக்கும்.*

*2. மீன்வள மேலாண்மைத் திட்டம்(கள்), கடல் வளங்களின் நிலையான தன்மையை உறுதி செய்யவும் மற்றும் இந்திய கடல் மண்டலத்தின் சுற்றுச்சூழல் சமநிலையைப் பராமரிக்கவும், உணவுப் பாதுகாப்பு மற்றும் வறுமை ஒழிப்பு ஆகியவற்றின் பின்னணியில் இவை சிறிதளவில் நிலையான மீன் வளத்தைப் பாதுகாப்பு அடையச் செய்யும்.*

*3. இந்த சட்டத்தின்கீழ் வழங்கப்பட்ட அனைத்து உரிமங்களும் மத்திய அரசால் அறிவிக்கப்படக்கூடிய மீன்வள மேலாண்மைத் திட்ட(ங்களுக்கு) உட்பட்டதாக இருக்கும் மற்றும் அவ்வாறு வழங்கப்பட்ட உரிமத்திற்கும், மீன்வள மேலாண்மை திட்டத்திற்கும் முரண்பாடு ஏற்பட்டால், கூறப்பட்ட திட்டம் முன்னுரிமை பெறுவதுடன், அதன் விதிகள் இந்த உரிமத்திற்குப் பொருந்துவதாக மாற்றி அமைக்கப்படும்.*

**11. அழிக்கும் மீன்பிடி வகையைத் தடை செய்தல்:**

*அழிவுக்கரமான மீன்பிடிப்பில் உள்ளடக்கியவை யாதெனில், பயங்கரமான வெடி அல்லது வேறுவகையில் வெடிக்கும் பொருள், நஞ்சு அல்லது தீங்கு விளைவிக்கும் இராசயனங்கள், ஒளி அல்லது பிற நாசகரமான பொருட்கள் அல்லது இந்திய கடல் மண்டலத்திலுள்ள மீன்களை வேறு ஏதேனும் வகையில் பிடிக்க அல்லது அழிக்க செய்கிறவைகள் அனைத்தும் தடை செய்யப்படுகின்றன.*

**12. மீன்பிடித்தலை ஒழுங்குபடுத்துதல்:**

*மத்திய அரசானது, பிரத்தியேகப் பொருளாதர மண்டலத்தின் ஏதாவதொரு பகுதியில் மீன்பிடிப்பதற்கு தடை விதிக்கலாம் அல்லது மீன்பிடிக்கும் கலன்களின் வகைகள், பயன்படுத்தப்படும் மீன்பிடிக் கலனின் பல்லிணை, மற்றும்*

பிரத்தியேகப் பொருளாதார மண்டலத்தின் எந்தவொரு பகுதியிலும் மீன்பிடிப்பதற்குப் பயன்படுத்தப்படும் கலன்களின் எண்ணிக்கை மற்றும் அவ்வகை மீன்கள் மற்றும் அளவுகள் ஆகியவற்றை பரிந்துரைக்கப்பட்ட காலம்(கள்) வரை கட்டுப்படுத்தலாம்; ஒழுங்குபடுத்தலாம்.

## அத்தியாயம் - 6

## முகவர்களின் செயல்பாடுகள்

**13. அலுவலர்களை நியமனம் செய்தல்:**

ஏதேனும் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட செயல்பாடு(களை) நிறைவேற்ற மத்திய அரசாங்கம் அறிவிப்பு மூலம் நீதிமன்றம் அல்லது நீதிமன்ற குழுமம் அமைக்கவும் அல்லது மத்திய அரசாங்கம், ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட அதிகாரிகளை அல்லது மாநில அரசாங்கம், அதிகாரிகளை அல்லது முகம அலுவலர்களை அமர்த்தி, ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட செயல்பாடு(களை) இச்சட்டத்தின்கீழ் தீர்வுக்குக் கொண்டுவரலாம்.

**14. ஆணையம் அமைத்தல்:**

இந்திய கடல் மண்டலங்களில் கடல் மீன்வள மேம்பாடு, மேலாண்மை மற்றும் ஒழுங்குபடுத்துதல் ஆகியவற்றிற்காக, “தேசிய கடல் மீன்வள ஆணையம்” நிறுவலாம்.

## அத்தியாயம் - 7

## சோதனையிடுதல் மற்றும் பறிமுதல் செய்வதற்கான குழுமத்தின் அதிகாரங்கள்

**15. அங்கீகரிக்கப்பட்ட அதிகாரிகளின் அதிகாரங்கள்:**

I. எந்தவொரு அங்கீகரிக்கப்பட்ட அதிகாரியும், இச்சட்டத்தின் ஏதாவதொரு பிரிவும் மீறப்பட்டதாக கிடைக்கப்பெற்ற தகவலின் அடிப்படையில் திருப்தியடைந்தால்,

*குழுமமானது கடலாண்மை மண்டலத்திற்குள் பரிந்துரைக்கப்பட்ட பகுதிக்குள் பிடியாணை அல்லது பிடியாணையின்றி தேடுதல் மற்றும் மீன்பிடிக் கலனை பல்லிணையுடன் பறிமுதல் மற்றும் கைப்பற்றுதல் செய்யலாம்.*

II. *உட்பிரிவு (1)–இன்கீழ் எந்தவொரு நடவடிக்கையையும் மேற்கொள்ளும்போது, அங்கீகரிக்கப்பட்ட அதிகாரி நியாயமென கருதினால் தேவையான வலிமையைப் பயன்படுத்தலாம்.*

III. *கலனை பறிமுதல் செய்த அங்கீகரிக்கப்பட்ட அதிகாரிக்கு, பரிந்துரைக்கப்பட்ட இந்நோக்கத்திற்காக வேண்டி துறைமுகத்தில் கலனை நிறுத்தி வைப்பதற்கும், பராமரிப்பதற்கும், இதர செலவீனங்களுக்கும் பரிந்துரைக்கப்பட்ட செலவு கட்டணங்களை வழங்கலாம்.*

IV. *பிரிவு 15, உட்பிரிவு (1)–இன்படி ஏதேனும் கலன், அதன் பல்லிணை அல்லது வழக்கின்படி பிடிபட்டால், உடனடியாக அவ்வதிகாரி குற்றவியல் நீதிபதி முன்பாக அதனை ஒப்படைத்து, இந்த சட்டத்தின்கீழ் குற்றத்தை நிருபிப்பதற்காக பரிந்துரைக்கப்பட்ட அதிகாரியின் அல்லது நீதிபதியின் உத்தரவைப் பெற வேண்டும்.*

V. *இச்சட்டத்தின்கீழ் ஏதேனும் கலனானது குற்றம் இழைத்துவிட்டு, இந்தியப் பிரத்தியேகப் பொருளாதார மண்டலத்தின் எல்கையைத் தாண்டிய நிலையில் அக்கலன் சென்றால், இப்பிரிவின்படி அங்கீகரிக்கப்பட்ட அதிகாரியின் அதிகாரம் என்பது சூழ்நிலைகளுக்கு ஏற்ப தேசிய அதிகார எல்கைக்கு அப்பாற்பட்ட பகுதிகளிலும், சர்வதேச சட்டத்தால் அங்கீகரிக்கப்பட்ட அளவிலும் மற்றும் இந்தியாவில் பொருந்தக்கூடிய சட்டங்கள்படியும் அமைவதாக இருக்கும்.*

## அத்தியாயம் - 8

## குற்றங்கள் மற்றும் அபராதங்கள்

**16. உரிமம் இல்லாமல் மீன்பிடித்தல்:**

I. *இந்திய கடல் மண்டலத்தில் எந்தவொரு இந்திய மீன்பிடிக் கலனும் அல்லது உரிமம் பெறாமல் ஆழ்கடலில் அல்லது பிரிவு 3, உட்பிரிவு (1)–இன்படி வழங்கப்பட்ட உரிமத்திற்கு மாறாக மீன் பிடித்தால், அத்தகைய கலன் பறிமுதல் செய்யப்பட வேண்டும் மற்றும் அதன் உரிமையாளருக்கு அல்லது தலைவனுக்கு அல்லது கலனை இயக்குபவருக்கு பரிந்துரைத்துள்ளதுபோல் தண்டனையுடன் அபராதமும் வழங்கப்படலாம்.*

II. *இந்திய கடல்சார் மண்டலங்களில் ஏதாவது வெளிநாட்டுக் கலன் மீன்பிடித்தால், அத்தகைய கலன் பறிமுதல் செய்யப்பட வேண்டும் மற்றும் அதன் உரிமையாளருக்கு அல்லது தலைவனுக்கு அல்லது கலத்தை இயக்குபவருக்கு அபராதம் அல்லது சிறை அல்லது பரிந்துரைத்துள்ளதுபோல் இரண்டும் வழங்கப்படலாம்.*

III. *ஏதாவதொரு இந்திய மீன்பிடிக் கலன் பிரிவு 5–இல் கூறப்பட்டுள்ள கண்காணிப்பு, கட்டுப்பாடு மற்றும் மேற்பார்வை ஆகியவற்றை மீறிச் சென்றால் அக்கலனின் உரிமையாளருக்கு அல்லது தலைவருக்கு அல்லது இயக்குபவருக்கு பரிந்துரைத்துள்ளதுபோல் தண்டனையுடன் அபராதமும் விதிக்கப்படலாம்.*

IV. *ஏதாவதொரு வெளிநாட்டு மீன்பிடிக் கலன் பிரிவு 7–இன் விதிகளை மீறினால், அக்கலனின் உரிமையாளருக்கு அல்லது தலைவருக்கு அல்லது இயக்குபவருக்கு பரிந்துரைத்துள்ளதுபோல் தண்டனையுடன் அபராதம் மற்றும் சிறை விதிக்கப்படலாம்.*

V. *பிரிவு 8–இன் விதிகளை மீறுபவர்களுக்கு பரிந்துரைத்துள்ளதுபோல் தண்டனையுடன் அபராதமும் விதிக்கப்படலாம்.*

VI. இந்த சட்டத்தின்கீழ் வழங்கப்பட்ட அதிகாரத்தின்படி அல்லது அங்கீகரிக்கப்பட்ட அதிகாரி கடமைகளை நிறைவேற்றும்போது, யாராவது ஒருவர் வேண்டுமென்றே அங்கீகரிக்கப்பட்ட அதிகாரிக்கு இடைஞ்சல் செய்தால் அவனுக்கு/அவளுக்கு தண்டனையுடன் அபராதம் அல்லது சிறை அல்லது இரண்டும் விதிக்கப்படலாம்.

VII. ஒரு நிறுவன வியாபாரத்தில் இருப்பவர்கள் வியாபாரத்தில் நடக்கும் குற்றத்திற்குப் பொறுப்பு ஆகுவதுபோல், இந்த சட்டத்தின்கீழ் ஓர் நிறுவனம் குற்றம் செய்தால், குற்றம் நடந்த நேரத்தில் இருந்த ஒவ்வொருவரும் கூட்டாகப் பொறுப்பாவது மட்டுமின்றி, அக்குற்றத்திற்கு நிறுவனம் குற்றம் உடையதாக இருப்பதால் பரிந்துரைத்ததுபடி அவர்கள் கடுமையான தண்டனைக்கு உள்ளாவர்.

அவனுக்கு/அவளுக்கு தெரியாமல் குற்றம் நடந்தது என்பதனை அவன்/அவள் சந்தேகத்திற்கு அப்பாற்பட்டு அல்லது அத்தகைய குற்றம் ஏற்படுவதனைத் தடுக்க அவன்/அவள் உரிய முறையில் செயல்பட்டார்கள் என்பதனை திருப்திகரமாக நிருபித்தால், இந்த சட்டத்தின்கீழ் இந்த உட்பிரிவிலுள்ள எதுவும் எந்தவொரு நபரையும் குற்றவாளியாகக் கருதி தண்டிக்காது.

VIII. பிரிவு 16, உட்பிரிவு 7–இல் குறிப்பிட்டுள்ளபடி, இந்த சட்டத்தின்கீழ் ஓர் நிறுவனம் குற்றம் செய்திருந்தால் அல்லது சம்மதத்தின் மூலம் குற்றம் செய்திருந்தால், இயக்குநர், மேலாளர், செயலாளர் அல்லது ஏதாவது அலுவலரின் புறக்கணிக்கப்பால் குற்றம் ஏற்பட்டிருந்தால் அந்நபரும் குற்றவாளியாக கருதப்பட்டு பரிந்துரைக்கப்பட்டதுபோல் தண்டனைப் பெறுவார்.

**17. பிடியாணைக்குரிய குற்றங்கள்:**

குற்றவியல் நடைமுறைச் சட்டம் 1973–இல் குறிப்பிடப்பட்டு இருந்தாலும் பிரிவு 16, உட்பிரிவு (2), (4) மற்றும் (6)

ஆகியவற்றின்கீழ் வரையறுக்கப்பட்ட தண்டனைக்குரிய குற்றங்கள் அனைத்தும் இச்சட்டத்தின்படி பிடியாணை உடையதாக இருக்கலாம்.

**18. குற்றச்சாட்டுகளைக் கேட்டல்:**

(i) அங்கீகரிக்கப்பட்ட அதிகாரியின் எழுத்துப்பூர்வமான அறிக்கை இல்லாமல் பிடியாணையுடைய எந்தவொரு தண்டிக்கத்தகுந்த குற்றத்தையும் விசாரிப்பதற்கு நீதிமன்றமோ அல்லது நீதிமன்ற குழுமமோ இந்த சட்டத்தின்படி அமைக்கப்படவில்லை.

(ii) பெருநகர நீதிபதி அல்லது முதல் வகுப்பு நீதித்துறை நீதிபதி ஆகியோரின் படிநிலைக்குக் கீழுள்ள எந்தவொரு நீதிமன்றமும் இச்சட்டப் பிரிவு 16, உட்பிரிவு (2), (4) மற்றும் (6) ஆகியவற்றை விசாரணை செய்யக்கூடாது.

(iii) துணைக்கோட்ட நீதிபதி பதவிக்குக் கீழுள்ள எந்தவொரு அலுவலரும் பரிந்துரைக்கப்பட்ட இச்சட்டப் பிரிவு 16, உட்பிரிவு (1), (3), (5) மற்றும் (7) ஆகியவற்றை விசாரணை செய்யக்கூடாது.

**19. தண்டனை மற்றும் அபராதம் வழங்குதல்:**

(i) குற்றவியல் நடைமுறைச் சட்டம் 1973, பிரிவு 29–இல் ஏதாவது குறிப்பிடப்பட்டதாக இருந்தாலும், மாநில அரசால் அங்கீகாரம் பெற்ற சட்டப்படியான பெருநகர நீதிபதி அல்லது முதல் வகுப்பு நீதித்துறை நீதிபதி ஆகியோர் இந்த சட்டப் பிரிவு 16, உட்பிரிவு (2), (4) மற்றும் (6)இன்படி எந்தவொரு தண்டனையும் வழங்கலாம்.

(ii) இந்த சட்டப் பிரிவு 8(3)–இன்படி அங்கீகரிக்கப்பட்ட சட்ட அலுவலர், பிரிவு 16, உட்பிரிவு (1), (3), (5) மற்றும் (7)–இபடி எந்தவொரு அபராதமும் அல்லது தண்டனையும் வழங்கலாம்.

**20. மேல்முறையீடு:**

(i) பெருநகர நீதிபதி அல்லது முதல் வகுப்பு நீதித்துறை

நீதிபதியின் தீர்ப்பினால் தீங்கு இழைக்கப்பட்டதாக ஒருவர் கருதினால், இந்த சட்டப் பிரிவு 18(3) உட்பிரிவு (2)இன்படி, இதுபோன்ற விசயங்களில் அதிகார எல்லைக்குட்பட்ட நீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்து கொள்ளலாம்.

(ii) அங்கீகரிக்கப்பட்ட அதிகாரியின் தீர்ப்பினால் தீங்கு இழைக்கப்பட்டதாக எவரேனும் ஒருவர் கருதினால், இந்த சட்டப் பிரிவு 18(3)–இன்படி அதிகார எல்லைக்குட்பட்ட மாவட்ட நீதிபதியிடம் மேல்முறையீடு செய்து கொள்ளலாம்.

## அத்தியாயம் – 9

## இதர விசயங்கள்

**21. நல்லெண்ண நடவடிக்கைகள்:**

(i) இந்த சட்ட விதிகளுக்கு இணங்க, அங்கீகரிக்கப்பட்ட அதிகாரி அல்லது எவராவது ஒருவர் நல்லெண்ணத்துடன் அல்லது கடமையை நிறைவேற்றும் நோக்கத்தில் அவன்(அவள்) செயல்பட்டிருந்தால், அவர்கள்மீது குற்றச்சாட்டோ அல்லது சட்ட நடவடிக்கையோ எடுக்க முடியாது.

(ii) நல்லெண்ணத்துடன் செய்யப்படும் எந்தவொரு செயலிலுல், எவ்வகையான இழப்பு ஏற்பட்டாலும், அல்லது ஏற்பட வாய்ப்புள்ளதாக இருந்தாலும் அல்லது இந்த சட்ட விதிகளை பின்பற்றுவதற்காக ஏற்பட்ட நிலையில், அரசுமீது குற்றச்சாட்டோ அல்லது ஏதாவது சட்ட நடவடிக்கையோ எடுக்க முடியாது.

**22. விதிகளை உருவாக்கும் அதிகாரம்:**

1. மத்திய அரசு, அரசிதழில் அறிவிப்பு செய்வதன் மூலம் இந்த சட்ட விதிகளை நடைமுறைக்கு கொண்டுவரலாம்.

2. குறிப்பாக, மற்றும் மேற்கூறிய அதிகாரங்களின் பொதுவான

*தன்மைக்கு எந்தவித பாரபட்சமும் இல்லாமல், இந்த சட்டத்திலுள்ள அந்த விதிகளை அனைவருக்கும் அல்லது கீழ்க்காணும் எந்தவொரு விசயத்திற்கும் வழங்கலாம்.*

a) *உட்பிரிவுகள் (1), (2) மற்றும் (3)–இன்படி, செயல்முறை மற்றும் படிவத்தின் பயன்பாடு என்பது உரிமத்திற்கான கட்டணம், வரி மற்றும் செலவீனம்.*

b) *பிரிவு 3, உட்பிரிவு (1)–இன்படி, மீன்படி கலனுக்கான உரிமம் பெறல் மற்றும் மீன்பிடித்தல் தொடர்பான நடவடிக்கைகள் மற்றும் நிபந்தனைகள் ஆகியவற்றிற்கு உட்பட்டு படிவம் மற்றும் உரிமம் வழங்கப்படும்.*

c) *பிரிவு 3இன்படி, செயல்முறை மற்றும் படிவத்தின் பயன்பாடு என்பது உரிமத்திற்கான கட்டணம், வரி மற்றும் செலவீனம் மூலம் சேகரிக்கப்பட்ட வருவாய்.*

d) *பிரிவு 3 உட்பிரிவு (7)–இன்படி விதிமுறை, நடைமுறை மற்றும் நிபந்தனை ஆகியவற்றின் அடிப்படையில் உரிமம் மறுத்தல் அல்லது கலனுக்கு அல்லது குறிப்பிடப்பட்ட வகையான கலன்களுக்கு உரிமம் வழங்குவதை நிறுத்தி வைத்தல்.*

e) *பிரிவு 4 உட்பிரிவு (1)–இன்படி விதிமுறை, நடைமுறை மற்றும் நிபந்தனை ஆகிய குறிப்புகளின்படி உரிமத்தை இரத்து செய்தல் அல்லது இடைநீக்கம் செய்தல்.*

f) *பிரிவு 5–இன்படி கண்காணிப்பு, கட்டுப்பாடு மற்றும் மேற்பார்வை ஆகியவற்றை நடைமுறைப்படுத்துவதற்கான அமைப்பு.*

g) *பிரிவு 6–இன்படி தொழிலாளி, காப்பீடு, கடல் பாதுகாப்பு மற்றும் மீன்பிடி கலங்களின் கடல் தகுதி குறித்த விதிமுறை.*

h) *பிரிவு 7–இன்படி, மீன்பிடி பல்லிணை வைத்திருக்கும் முறை மற்றும் இந்திய கடல்சார் மண்டலங்கள் வழியாக செல்லும் வெளிநாட்டுக் கலன்கள் பின்பற்ற வேண்டிய நடைமுறை.*

i) பிரிவு 8–இன்படி விஞ்ஞான ஆராய்ச்சி, கணக்கெடுப்பு அல்லது விசாரணை அல்லது சோதனை அல்லது பொழுதுபோக்கு அல்லது பிற நோக்கத்திற்காக மீன்பிடித்தல் குறித்த விதிமுறைகள் மற்றும் நிபந்தனைகள்.

j) பிரிவு 9–இன்படி, இனப்பெருக்கக் காலத்தில் இடம் மற்றும் தடைக்காலம் மூலம் மீனைப் பாதுகாப்பதற்கான முறை மற்றும் நடைமுறை.

k) பிரிவு 12–இன்படி மீன்பிடிக்கும் முறைகள், கலன்கள், பல்லிணை, பரப்பளவு, இனங்கள், மீன்களின் அளவு மற்றும் மீன்பிடிக்காலம் மற்றும் பிறவற்றை கட்டுப்படுத்துதல்.

l) பிரிவு 15–இன்படி, மீன்பிடிக் கலன்கள் மற்றும் பொருட்கள் ஆகியவற்றைத் தேடுதல் மற்றும் பறிமுதல் செய்தல் தொடர்பான நடைமுறைகள்.

m) பிரிவு 16–இன்படி, வெவ்வேறு குற்றங்களுக்கான அபராதம்.

n) பிரிவு 18 மற்றும் 19–இன்படி, பிடியாணை மற்றும் செயல்முறை.

**23. உரிமம் பொருந்தாத நிலைமை:**

பிரிவு 7 உட்பிரிவு (5)–இன்படி கடல் எல்லைகள், கண்டத்திட்டுகள், பிரத்தியேகப் பொருளாதார மண்டலம் மற்றும் இதர கடல்சார் மண்டலச் சட்டம் 1976 ஆகிய தேவைகளுக்கும் மற்றும் இந்த சட்டத்தின்கீழ் குறிப்பிடப்படுள்ள பிற தேவைகளுக்கும் உரிமம் பொருந்தாது.

**24. தடைகளை நீக்குதல்:**

இந்த சட்ட விதிகளை அமல்படுத்துவதில் ஏதேனும் சிரமம் ஏற்பட்டால், உத்தரவு மூலம் மத்திய அரசு அதிகாரப்பூர்வ அரசிதழில் அரசாணை வெளியிட்டு, இந்த சட்டத்தின் விதிகளுக்கு மாறாதவகையில் இருக்குமாறு பார்த்துக் கொள்வது அவசியமானதாகும்.

இந்த சட்டம் அமலுக்கு வந்த நாளிலிருந்து மூன்றாண்டுகள்

*கடந்தபின்னர் அப்படி எந்தவொரு அரசாணையும் பிறப்பித்தல் கூடாது.*

**25. பழைய சட்டத்தைத் திரும்பப்பெறுதல்:**

(i) *இந்திய கடல்சார் மண்டலங்கள் (வெளிநாட்டு கலன்களின் மீன்பிடிப்பதை ஒழுங்குபடுத்துதல்) சட்டம் 1981 இரத்து செய்யப்படுகிறது.*

(ii) *அவ்வாறு இரத்தாக இருக்கும்போது, ஏதாவதொரு அறிவிக்கை, உத்தரவு, நியமனம், சான்றிதழ், அறிவிப்பு அல்லது வழங்கப்பட்ட இரசீது, கொடுக்கப்பட்ட விண்ணப்பம், அல்லது வழங்கப்பட்ட உரிமம் ஆகியவை இந்த சட்டத்தின் விதிகளுக்கு முரணாக இல்லாத வகையில் அமல்படுத்தப்பட்டு இருந்தால், இந்த சட்டத்தின்படி செய்யப்பட்டதாக அல்லது நடப்பதாகக் கருதப்படும்.*

# THE NATIONAL MARINE FISHERIES (REGULATION AND MANAGEMENT) BILL, 2019

A bill to provide for regulation and management of fisheries in the Exclusive Economic Zone of India and Indian fishing vessels in the high seas and for responsible and long term sustainable and optimal utilization of marine fish resources; ensuring monitoring, control and surveillance; supporting safety and security of fishers at sea; protecting livelihoods of traditional and small-scale fishers; protection of biodiversity in the marine ecosystems; promotion of fishery conservation and management measures and for matters connected therewith and incidental thereto. Be it enacted by Parliament in the Seventieth Year of the Republic of India as follows:

## CHAPTER I

## PRELIMINARY

**1. Short title and Commencement:**

1) This Act may be called the National Marine Fisheries (Regulation and Management) Act, 2019.

2) It shall come into force on such date as the Central Government may, by notification, in the Official Gazette, appoint.

**2. In this Act, unless the context otherwise requires,**

a) "authorized officer" means any officer or subordinate officer of the Indian Coast Guard constituted under the Coast Guard Act, 1978, or such other officer of Central or State Governments as may be authorized by the Central Government.

b) "authorized entity" means any organization, department, agency or society of the Central or State / UT Government authorized to regulate, manage and coordinate, with authorized officer with regard to certain provisions of the Act as may be prescribed by the Central Government.

c) "code of conduct for responsible fisheries" means establishment of guiding principles and standards applicable for conservation, management and development of fisheries in the maritime zones of India and to provide a necessary framework for sustainable exploitation of aquatic living resources in harmony with the environment.

d) "company" means a company as defined in the Companies Act, 2013;

e) "conservation and management measures" means measures to conserve and manage the concerned species of living marine resources in the maritime zones of India and in the high seas that are adopted and applied consistent with the relevant rules of international law.

f) "ecosystem approach to fisheries management" means a practical way to implement sustainable development and sustainably maximize the ecosystem benefits of a fishery system, including ecological well-being, human well-being and good governance.

g) "endangered, threatened and protected species" include forms of marine animals that are endangered or threatened and need protection by state or national legislations or applicable international instruments or in need of a protected status, and inter alia include sea turtles, marine mammals and some species of fishes as may be notified by the Government.

h) "exclusive economic zone" means the exclusive economic zone of India as defined under section 7 of the Territorial Waters, Continental Shelf, Exclusive Economic Zone and Other Maritime Zones of India Act, 1976;

i) "fish" means finfish, molluscs, crustaceans, and all other forms of marine animals and plants other than marine mammals, reptiles and birds.

j) "fisheries" means "fishing" and "fishing related activities".

k) "fishing" and "fishing related activities" includes -

i. catching or taking or harvesting of fish by any method;

ii. searching for or tracking or trailing or pursuing fish;

iii. engaging in any other activity that inter alia includes landing, packaging, processing, transshipping, or transporting of fish that have not been previously landed at a port;

iv. any operation(s) at sea directly in support of or linked to or in preparation of any activity described in this definition or for processing of or preservation of any fish;

v. conservation and management of marine living resources.

l) “fisheries management plan" means any document issued by the Central Government in relation to long term conservation of fishery resources, optimization of fishing fleet with respect to available resources and sustainable use of fish stocks, development and management of fishery resources including monitoring, control and surveillance and maintenance of law and order for fishing and fishing related activities in the maritime zones of India, as may be prescribed.

m) “fishing vessel" as defined in the Merchant Shipping Act, 1958;

n) "foreign fishing vessel" means any fishing vessel other than an Indian fishing vessel;

o) "high seas" means the waters that are outside the outer limits of the sovereign exclusive economic zone of India, and which do not fall within the exclusive economic zone of any other country;

p) "illegal, unreported end unregulated fishing" includes following activities:

(A) illegal fishing means any fishing activity:

i. conducted by Indian fishing vessels in the Exclusive Economic Zone of India without the license issued under this Act;

ii. conducted by foreign vessels in the maritime zones of India;

iii. conducted by Indian fishing vessels in contravention of the conservation and management measures adopted by India within the Regional Fisheries Management Organization to which India is a signatory;

(B) Unreported fishing means any fishing activities:

i. undertaken by Indian or foreign vessel(s) which have not been reported, or have been misreported to the authority notified under this Act, in contravention of this Act and the Rules and Regulations framed there under;

ii. undertaken by an Indian vessel in the area of competence of relevant regional fisheries management organization to which India is a signatory.

(C) Unregulated fishing means any fishing activity:

i. undertaken by an Indian or fishing vessel, in a manner that is inconsistent with the provisions related to the conservation and management measures as provided under this Act areas beyond the maritime zones of India; or

ii. undertaken by Indian and foreign vessels within the maritime zone of India and by Indian Vessels in areas beyond the maritime zone of India, for fish stocks in relation to which there are no applicable conservation or management measures and where such fishing activities are conducted in a manner inconsistent with the provisions of this Act.

q) "Indian fishing vessel" means a fishing vessel registered under the provisions of the Merchant Shipping Act, 1958 and is owned by:

i. the Government of India or by the Government of any State, or by a corporation established by a Central Act or a State Act; or

ii. by persons to each of whom any of the following descriptions apply, namely-

